பரவும்புராணத்திறங்களொருபதினெட்டாலும்பன்னுமுப
மிருதியறுமூன்றாலுஞ்சீர்மேவுமுபபார்புராணத்தில்
நினைவுநானுன்குடனிரண்டாய்நிகழுந்தொகையினெறியாலும்
விரிபாரதராமாயணமாய்விளைபஞ்சவேதத்தாலும். (௨௪)

வரசங்கிதையின்றொகையாலும்வைகாநசற்பஞ்சவிராத்
திரநூலாலுமுலகுக்குத்திட்டாந்தச்சோதிடத்தாலும்
விரியும்பொருளாலாராயும்வேதமாம்வாகடத்தாலும்
தெரியும்கானந்தரும்வேதஞ்சிறக்கும்பரதநூலாலும். (௨௫)

திண்ணம்புனையுந்திசைக்கிரியைச்சிங்காரத்தாற்சிறப்பெய்த
நண்ணும்புவியிற்றிறமாகநாட்டும்பிரமாணமதாகி
வண்ணந்திகழுஞ்சிற்பமெனும்வருக்கமிகுசாத்திரத்தாலும்
எண்ணுஞ்சைவாகமமானேயியல்பாகவெடுத்திசைவித்தேன். (௨௬)

மைத்தார்குழலாயாங்கயினான்மறைபோற்றியநாராயணனுக்
கெத்தேவர்களுந்தேகமதாயிருக்குமவராகையினாலும்
ஒத்தார்மிக்காரில்லாவவ்வொருவன்சகலசத்தத்தின்
வித்தாரகாரவாச்சியனாய்விளங்குமேன்மையதனாலும். (௨௭)

கோதிலாவந்நாரணனேகூறுஞ்சீருவாந்தரியாமி
ஆதலாலுமவன்றன்னையாராரொந்தப்பேரோதி
ஓதியெந்தவிதத்தருவாயொளியாயுருவாய்த்தியானித்து
மேதையுடனேயெந்தெந்தவிதத்தாற்பூசைசெய்தாலும். (௨௮)

அந்தவந்தமாந்தர்களுக்கந்தவந்தமூர்த்திகளில்
சந்தமுந்தந்திரியாமிதானாயிருந்துதகுந்தரத்தால்
எந்தவெந்தப்பலன்களையுமீவானாராயணனேயென்
றுந்தும்பகவற்கீதைதனிலோதுமுண்மைப்படியாலே. (௨௯)

ஏதமில்லாவுலகத்திலெங்குந்தானாயிருந்தருளிக்
கோதில்லாதபூசையெல்லாங்கொள்வானாராயணனென்றே
காதல்கூரவொன்றாகக்காணுமதுவேயறிதென்றாள்
ஓகைகூராகமமானுமொக்குமென்றேயுளந்தெளிந்தாள் (௩௰)

பானேர்மொழியார்தங்களிலிப்படிச்சம்மதமாய்ப்பகர்தலுமே
ஞானாதிகராயங்கிருந்தநன்மாமகத்தோரனைவோரும்
பூனேர்குழலீரிவ்விடத்துப்புகன்றமொழியுமுத்தரமும்
மேனீரிசைந்தவுடன்பாடுமிகநன்றென்றுவியப்புற்றார். (௩௧)

இன்னபடியாற்சங்கரன்மாலென்னுமிருவோர்மகிமையெல்லாம்
பன்னியறிவாற்பூருவமாம்பக்கஞ்சித்தாந்தந்தோன்ற
மின்னினிடையாகமவல்லிவேதவல்லியெனுமாதர்
சொன்னதாகச்சொன்னதமிழ்ச்சுருதியானசாத்திரத்தை. (௩௨)

மீனவுருவாய்ச்சோமுகனைவென்றுவேதங்களைப்பிரமன்
ஆனசுதனுக்களித்துலகுக்காதியர்ச்சாவதாரனுமாய்
வானதிநேராரணியின்வடதீரத்துவேதபுரித்
தானின்றக்கருமணியந்தாமப்பெருமான்சந்நிதியில். (௩௩)

மன்னுன்மறைபோலெமக்குவகைவழங்குமதனுவினிவுலகில்
தன்னேரில்லாவிந்நூல்போற்றகைமைபெறுநூன்மற்றில்லை
யென்னுமவ்வையோருளமிறும்பூதெய்தத்திருக்கோயிலினின்று
மின்னார்நிகரிப்படைப்பரமன்விளம்பியிட்டபடியாலும். (௩௪)

பரவுசுருதிசாத்திரசம்பன்னரானவனைவோரும்
பெருமையானவருசமயப்பேரும்பிறருஞ்சம்மதிக்க
உரிமையானபொருள்விரித்தாங்குகந்தேயரங்கேற்றிடுமந்நாள்
பரமன்கரியபிரானுகந்தாபரணமளித்தபடியாலும். (௩௫)

வெள்ளைத்துகிலையிடையுடுத்துவெள்ளைக்கலன்கள்மிளிர்ந்தொளிரத்
தள்ளற்கரியபேருவகைதலைக்கொண்டோடிச்சவைகாண
உள்ளத்தெளிவாமிந்நூற்றன்னெண்மார்பணைத்துக்கலைமகடன்
வள்ளற்கரத்தான்முறுவலித்துமகிழ்ந்தேயீந்தபடியாலும். (௩௬)

வளரும்புகழ்சேரவ்வேதகிரியெம்பெருமான்வேதாந்தத்
தெளிவின்பயனைத்தமிழாக்கச்செய்தவிந்தத்திருமுறையை
ஒளிருஞ்சபையோர்கண்காணவுலகோராய்ந்ததம்பத்தின்
அளவுமெதிரேசென்றூரவுங்கீகரித்தபடியாலும். (௩௭)

பரம்புஞ்சைவர்முதலாயபரவாதியர்களுளந்தெளிய
நிரம்புங்கேள்வியவைக்களத்தோர்நீடுங்கருமாமணிவண்ணன்
வரம்பில்சீர்க்கோயிலின்முன்னர்வயங்குபெருந்தீவளர்த்ததனில்
திரம்பொங்கிந்நூல்பகலளவிட்டெடுக்கத்தீயாப்படியாலும். (௩௮)

மிகுமிந்நூல்போற்றெய்வீகம்விளைந்தநூல்கள்வேறில்லைத்
தொகைமன்னியவிப்பெருநூலிற்சொன்னபரமார்த்தந்தன்னில்
இகலொன்றின்றிநிறைவேறவெவருட்பட்டாரவர்தாமே
நிகரின்றியபூதலமீதுநீடுஞ்சருவஞ்ஞியுராவார். (௩௯)

அரிதைப்பதிவாழரிதாதனருமாமறையைத்தமிழ்செய்து
விரிவற்றுணாத்தவிருசமயவிளக்கநூலின்பரமார்த்தம்
பரிவுற்றுணர்வாரதுகேட்பார்படிப்பார்பாராட்டுதல்செய்வார்
இருமைப்பயனென்றுரைக்கின்றவிகமும்பரமும்பெருவாரே. (௪௰)

சித்தாந்தப்படலம் முற்றும் ஆக திருவிருத்தம் ௬௩.

காண்டம் ௪௰ படலம் ௨௯௰ பரிச்சேதம் ௱௩௰ கூடிய

திருவிருத்தம் ௨௲௱௰௯ இருசமயவிளக்கம் முற்றிற்று.

அரிதாசர் திருவடிகளே சரணம்.